# சித்திர புத்திரர் சரித்திரம்.



—— ஸ்ரீ தேவியின் அருளால் ——

கல்கத்தாவிலிருக்குப்,

ஸ்ரீமதி சுப்புலெக்ஷிமி அம்மாள்

(Mrs. K. A. KRISHNA IYER.)

அவர்கள் இயற்றியது.

---



1950.

உ

# சித்திர புத்திரர் சரித்திரம்.



— ஸ்ரீ தேவியின் அருளால் —

கல்கத்தாவிலிருக்கும்,


ஸ்ரீமதி சுப்புலெக்ஷிமி அம்மாள்

( Mrs. K. A. KRISHNA IYER.)


அவர்கள் இயற்றியது.

---



1950

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 15 | ஆயுள் வருத்தி | ஆயுள் விருத்தி |
| 3 | 9 | ரொரத்தி | ஹாரத்தி |
| 4 | 5 | எழுதா | எழுத |
| 5 | 13 | திரி | திரு |
| 7 | 10 | அகிய | ஆகிய |
| 8 | 17 | தயவாயாக | தயவாக |
| | 20 | கண்ணீருய் | கண்ணீராய |
| | 24 | அறனைரும் அரன் | அறனைரும் |
| 13 | 3 | தனிவாவி | தனிவாவி. த. |
| 14 | 4 | சப்தமிடா | சப்தமிட |
| 15 | 30 | சாக்ரகியார் | சாக்சியார் |
| 16 | 22 | ஒடிவந்து | ஒடிவந்து. இ. எ. |
| | 23 | இ. எ. வாராய் | வாராய் |
| 21 | 17 | வாழ்த்திடவேறி | வாழ்த்திடவே |
| 24 | 12 | மனந்திடவே | மறைந்திடவே |
| 27 | 1 | தானிரு | தானிறுதி |
| 29 | 9 | அவளுக்கண்டு | அவளுங்கண்டு |
| 30 | 6 | தானறிந்தான் | தானறிந்தாள் |



---



ஸ்ரீ

குருவே துணை.






# சித்திர புத்திரர் சரித்திரம்.

### கட்டம் 1. நானா நான்னான மெட்டு.

சித்திர புத்திரர் கதையை சீருடனே பாடிடவே
சித்திவினாயகரே சித்தம் இரங்கிடுவீர்.

நயினார் கதையுரைக்க நான்முகனார் தேவியரே
நங்கை என்னாவினிலே சங்கையற வீற்றிருப்பாய்.

ஐங்கரனுக் கிளையோனே ஆறுமுக வேலவனே
அம்பிகையாள் பாலகனே அரனார் திருமகனே.

பசுவின் வயிற்றினிலே பாலகன் பிறநத கதை
பாருலகோர் தானறிய பாடவே அருளுமய்யா.

பாரளந்த மாயவனே பாக்ய லக்ஷ்மி நாயகனே
பாற்முடிய ஆலிலையில் படுத்துக் கிடப்பவனே.

பாப புண்யமுள்ள தெல்லாம் பதிவாயெழுதுமந்தா
பாலகனார் தன் கதையை பாரமில்லாமலருளும்.

குருதேவியான எந்தன் கூற்மாவதாரன் பாரி
குற்றமின்றி கார்த்திடவே சற்றும் பிரியாதிருப்பாய்

அனுக்ரகங்கள் செய்திடுவாய் அன்னைவாணி தேவியரே
அக்ஷர ஸொரூபியரே ஆதரவு தாருமம்மா.

எட்டுரெண்டும் அறியாத ஏழை உரைத்திடவே
தப்பிதங்களன்னியிலே தயவாக வாருமம்மா.

## கட்டம் 2. பெற்றெடுத்த தந்தை மெட்டு.

அயனரனும் அச்சுதனும் அமராபுரி தேவரெலாம் கூடி
ஆனந்தமா யிருக்கையிலே அறனுரைப்பார் அன்புடனே நாடி.

நன்மை தீமை தான் தெரிய நடுவெழுதும் நற்கணக்கர் வேண்டும்
எமதருமர் தன்னிடத்தில் ஏற்றதோர் கணக்கெழுத வேண்டும்.

பாப புண்ணியம் பண்ணிேனாரை பகுந்தெழுத பாலகனும் வேண்டும்
பதினாலு லோகமெல்லாம் பத்திரமாய் தானெழுத வேண்டும்.

தேவரிஷி தெய்வங்களின் தீது நலம் வரைந்திட வேண்டும்
ஏடெழுதும் எழில் கணக்கர் ஏற்றமான பூஜைசெய்ய வேண்டும்.

இன்னிலத்தில் இன்பமுள்ள ஈசனருள் பெற்றிடவே வேண்டும்
கணக்கரை நினைந்தவர்க்கும் கதைதனைப் படிப்பவர்க்கும் உலகில்,

கரையடங்கா செல்வங்களும் கைலை நாதன் திருவருளும் கூடும்
உத்தமனார் தன் கதையை உரைத்திடவே கேட்டிடுவீர் நீங்கள்.

உத்தரங்கள் சொல்லாமலே உண்மையாக சேழ்ப்போர் க்லேசம்
போக்கும், புத்ரன் பொருள் பாக்கியங்கள் பக்தி ஆயுஸ்வ்ருத்தி
ரோகம் போக்கும்.

ஸத்து சித்தானந்தருட சரணடியில் நம்மை இப்போ சேர்க்கும்
ஈஸ்வரனார் இயம்பினதோர் ஏற்றதொரு நற்கணக்கர் கதையை.

இன்பமுடன் நானுரைக்க ஏற்றுபிழை பொறுப்பீர் பெரியோரே
இன்னிலத்தில் சிறுமி எனக்கிதமளித்து கார்த்திடுவீர் நீரே.

## கட்டம் 3 ஒரு தினம் உமையவள் மெட்டு.

சித்திரைக்கு சித்திரையில் சிறந்த பௌரணையில்
சீரான விறுதம் இருந்து செம்பட்டு அணிந்துமே
அன்ன ஸொர்ண வஸ்திர தானம் அடைக்காயிலே தானம்
இன்னும் பல் தானம் செய்து ஏற்றமாய் பணிந்துமே.

பந்தல்விதானம் செய்து தோரணங்கள் கட்டியே
விந்தை வினயகரை விருப்பமாய் போற்றியே
பூரண கும்பம் நிரைத்து பொன்மலரும் சூட்டியே
வஸ்திரம் தக்ஷிணை வைத்து வகையுடன் போற்றியே

சந்தணம் குங்குமம் பன்னீர் ஸம்பறமமாய் சாற்றியே
கமுகு கரும்பு வாழை கனிசமாய் நிறுத்தியே.

பசும்பொன் விளக்கு வைத்து பூமலரும் சூட்டியே
வாழை இலை விரித்து வகை கனிகள் வைத்து

கடலை பொரியவலும் கரும்போடிளநீரும் கற்கண்டும்
கதலியும் கணக்கில்லா பழங்களும்
பலகார பக்ஷணம் பானக்கம் நீர்மோர் பாயஸம்
புத்துருக்கு நெய்யும் போக்கியமான போஜனங்களும்

அன்னமிக சமைத்து அரன் பாலன் முன்வைத்து
நேமமாய் தாம்பூலம் வைத்து ஸ்தோத்திரமும் பண்ணியே
மங்கள நொரத்தி செய்து மகிழ்ந்து நமஸ்கரித்து
சங்கையறவே பூஜித்து மங்களமாய் நேசித்து.

## கட்டம் 4. கோமதி அருள் மேட்டு.

சித்திர புத்திரரை நமது சிந்தையிலே நிறுத்தி
நாமும் சீராக ஆவாகித்து
சீதளமானதொரு செண்பகமலர் புனைந்து
அரும்பு மலர்களெல்லாம் ஆராய்ந்து தானெடுத்து

உள்ளமகிழ் நேவேத்தியங்கள் உத்தமருக்கே படைத்து
புஸ்தகத்தினோடிலங்கும் பசும்பொன் னெழுத்தாணியுடன்
பூதலம் தன்னிலுள்ள புதுமையான பொருளும்
புண்ணியருக்கே அளித்து நாமும் பூரணமாய் ஸ்தோத்தரித்து

அடிவணங்கி இக்கதையை அன்பாக கேட்டிடுவீர் தர்மந்தழைத்தி
டுவீர் தரணியில் தன்மை யுணர்ந்திடுவீர்.
பாவியர் களிக்க தயை பகரஒண்ணு தறிவீர்
போத அறிவுடையோர் தினமும் போற்றி புகழ்ந்திடுவீர்

தேவலோகம் தன்னிலே ஸ்திரமாய் நடந்ததொரு
சேதியைக் கேளுமினி உலகில் சித்தம் தெளிவுடையோர்
இந்திர நிந்திராணியுடன் இன்பமாய் வாழ்கையிலே
மைந்தனில்லாக் குறையால் மன்னனும் மனக்லேசத்தோடுரைப்பார்

செல்வம் இருந்தும் என்ன சிறுவனில்லாததாலே
சீரழிந்து போகும் பெண்ணே இப்பொழுதே சிவனை நினைப்போம்.
கண்ணே அளவற்ற தானம் செய்து அரனுரை பூஜைசெய்து
மெத்த பக்தியுடனே இருபேரும் மெய்ப்பொருளைப் பணிந்தார்

### கட்டம் 5. உச்சிதமாய் தாம்பிர மெட்டு.

இந்தப்படியாயிருக்க ஈஸ்வரரப்போ ஏதுரைப்பார் தேவியிடம்
இனிமையாகவே முப்பத்து முக்கோடி தேவர் முன்னிருக்கவே
நாற்ப்பத்தி எண்ணாயிரவர் நாதனைப் போற்ற

அண்டசராசரக் கணக்கை அடைவுடன் எழுதா
ஆனைமுகன் ஆறுமுகன் அடைவில்லை இதற்கு
மூத்த பிள்ளை கணபதியோ மோதகப் பிரியன்
கோலமயில் வாகன் குறத்தியின் மோகன்

சூரரை ஸம்ஹாரம் செய்வான் ஸுந்திரபாலன்
ஏடெடுத்து கணக்கெழுதான் எனக்குபதேசன்
அவரவர்க்கு அடைவாய் வேறு படையிருப்பதால்
அதற்கு வேறு உபாயம் செய்வோம் ஆதி சக்தியே.

தங்கப் பலகை ஒன்று தானெடுக்கச் செய்து
தன் கையால் உறுவமொன்று தீட்டி வைத்தாரே
உமையவளும் உகந்து மெத்த உருவம் பாலனை,
உத்தமரே செய்ய வேணுமென்று போற்றவே

அப்படியே அனுக்ரகித்தார் அரனுமப்போ
உடன் பாலனும் பதறி அழ பராசக்தியும்
பாலனை வாரி அணைத்து பாலமுதூட்டி
சித்திர புத்திரனென்று சேரவே அழைத்தார்

அலங்கார பூஷணங்கள் அன்புடன் பூட்டி
அண்டபுவன கணக்கும் அச்சுதன் கணக்கும்
கருவேலம் கைலாஸ நாதர் கணக்கும்
நான்முகன் நாரதன் இந்திரன் நடுவுள்ள கணக்கும்

பாப புண்ய பலனெழுத பாக்கியமளித்து
பாலனுக்கு வரமளித்து பகர்ந்திடுவாரே,
அன்றன்று கணக்கெனக்கு அறிவிப்பீரென்றார்
பாலன் அப்படியே ஆகவென்று அரனைப் பணிந்தார்
அண்டையிலிருந்து கணக்கெழுதி வந்தாரே
அன்னை பரா சக்தியும் அகங்களித்தாரே.

### கட்டம் 6. திருப்பணந்தாள் மெட்டு.

இப்படி இங்கே இருக்க இந்திரனப்போ
ஈஸ்வரனை நோக்கித் தபம் செய்யவெண்ணியே.

பத்தினி இந்திராணி தேவர் பரிவாரத்துடன்
பவழமணி தேரிலேறி பதவியை விட்டு

கௌதமரிஷி பத்னி அகலிகையாளும்
ப்ருதகால தீர்த்தமாட பாவையுமப்போ
பார்த்தானே இந்திரனும் ஆசை மீறியே
மோகம் கொண்டு மோசம் செய்ய மனதிலெண்ணி

தேரை விட்டு கீழிறங்கி தேவ ராஜனும்
தீங்கோழியாய் ரூபம் கொண்டு ஆஸ்ரமம் சேர்ந்து
அகலிகை ஆசையினால் அர்த்த ராத்திரியில்
சேவலாய் நின்று கூவிட கௌதம ரிஷி

ப்ருதஸ்நானம் பண்ணவென்று தானே நடந்தார்
திருநீற்றுப் பையுடன் கமண்டலம் ஏந்தி
திரிகெங்கை யுறக்கத்தைக் கண்டு கௌதமரிஷி
கேடு வந்ததென்று எண்ணிக் கிலேசமடைந்து

மாமலர் சோலையில் சென்று மலரைக் கண்டு
அரும்பு மலராமலிருப்பதைக் கண்டார்
சோதனை இதேதோ என்று துயரமடைந்து
துரிதமாய் ஆஸ்ரமம தன்னில் வரவே

இந்திரனும் அவ்விருளில் ரிஷி ரூபமாய்
வந்து அகலிகையிடம் வார்த்தைகளாட
மையல் கொண்டு தன்னுடைய மற்மங்களெல்லாம்
மாது அகலிகையிடம் வழுத்தி நின்றான்,

கெடுபாவியான நீயும் கீர்த்தி அழிந்து
கேவலமானநரகை அடைவாய் என்றாள்,
அகலிகை பதறி அழுது புலம்ப அப்போ ரிஷி
அண்டையிலே வந்துமே கண்டு
ஆரடா பயலே நீயும் அறிய உரைப்பாய் என்றுருத்திரமாய்
மொழிந்திட அமரேசனும்,

## கட்டம் 7. அழைத்துவரா மெட்டு.

பூனை யுருவம்கொண்டு போகுமந்த வேளையிலே
ஆரடா இந்நேரத்திலே அறிவுகெட்டு வந்தவனே
பேரும் ஊரும் தானுரைப்பாய் பித்தலாட்டமன்னியிலே
என்றுரைக்க இந்திரனும் ஏங்கி நடுநடுங்கி

வானுலக இந்திரன் நான் வருஷ பலன் கேள்க வந்தேன்
என உரைக்க கௌதமரும் இடும்பு செய்ய வந்தவனே
அகலிகையின்மேல் மோகம்கொண்டு அடைந்தாய் நீ என்றுசொல்லி
கண் சிவந்து கனல் பறக்க கடுஞ்சாபம் இட்டனரே.

இந்திரன் சரீரமெல்லாம் ஏக யோனி ஆகவென்று
சபித்தாரே கௌதமரும். தான்வெடித்ததே தேகத்தில்
கண்டானே இந்திரனும் கண் கலக்க முண்டாகி
விழுந்தானே பாதத்திலே விரும்பி என்னைக் காருமென்றான்

வஞ்சகமாய் செய்த பிழை மகரிஷியே பொறுத்திடுவீர்
இச்சாபம் தீர்த்து என்னை ரக்ஷிக்க வேணுமென்றான்.
எந்தனுடைய சாபமது தப்பாது இந்திரனே
ஆயிரம் கண்ணாய் வெடிக்க அரனும் அனுக்ரகிப்பார்

மாலயன் அரன்தனை நீ மாண்புடனே பூஜை செய்தால்
குறிகள் மறைந்து விடும் கொற்றவனே காண்பாயே.
அந்தப்படி பூஜைசெய்ய அவனுலகம் சென்றானே
ஆக்ரோஷமாக ரிஷி அகலிகையை பார்த்துரைப்பார்.

### கட்டம் 8. என்ன செய்வேன என்ற மெட்டு.

அகலிகைதனையே ரிஷி அருங்கல்லாய்ப் போகவென்றே
அருஞ்சாப மிட்டுடனே ஆரணங்கு தான் பதறி
மெய்கலங்கி உள் நடுங்கி வேதனை மிகவடைந்து
நாதன் பாதம் தானடைந்து நங்கையும் உரைக்கலுற்றாள்.

மோசம் அடைந்த எந்தன் சாப நிவாத்தி தாரும்
என்று கதறி அழவே ரிஷியும் இறக்கத்துடன்
அரக்கர்குலம் அறுக்க அச்சுதன் அவதரிப்பான்
அப்போதுன் சாபம் தீரும் ஆரணங்கே நீயறிவாய்.

அப்பொழுதழைத்துக் கொள்வேன் அஞ்ச வேண்டாம்
என்றுரைத்து அருந்தபம் செய்திடவே
ஆரண்யம் நோக்கி நடந்தார்

ஸ்ரீ ராமராய் அவதரித்து
தவமுனியின் பின்னே சென்று தாடகையை ஸம்ஹரித்து
செல்கையிலே பாதம் பட்டு

தையலரும் சாபம் நீங்கி கௌதமர் தனையடைந்து
நாதன் பாதம் போற்றி நின்று நங்கையும் மனமகிழ்ந்தாள்.

அமராவதி இந்திரனும் அரனரை பூஜை செய்ய
அங்கமதில் யோனியெல்லாம் ஆயிரம் கண்ணானதுவே.
அப்படி அங்கே இருக்க அகலிகை சாபமது
தேவலோக பட்டணத்தில் தீவிரமாய் சுட்டதுவே.

கட்டம் 9. என்னசெய்வேன் ஈசா மெட்டு.

வானுலகமெல்லாம் வளங்கள் குறைந்துமே
வானவர்களனேவோரும் மக்களில்லாத் தோய்ந்துமே
காய்க்கும் மரங்களெல்லாம் கனிகளுதிர்ந்துமே
பூக்கு மரங்களெல்லாம் புஷ்பமில்லா தோய்ந்துமே.

பசுக்கள் பறவை பக்ஷி பாழ் மலடு அகியே
புல்லும் கருகி மிக பூமியு முலர்ந்துமே
இந்தவிதம் இந்திரலோகம் ஈடழிந்து நின்றிட
இந்திரனர் தேவி இளங்கோதையும் நவின்றிட

நர்தா பத்தினியாள் சாபம் இப்போ பலித்திடக் கண்டீரோ
நாம் மலடு ஆனதல்லால் நாடெங்கும் மலடாச்சே
தவசு மறந்து புத்தி தட்டழிந்ததினலே
தையலெந்தனுக்கு மைந்தன் தானற்று போனேமிப்போ.

இந்த உரை தன்னைக் கேட்டு இந்திரன் மனம் நொந்து
மைந்தனெனக் கில்லாவிட்டால் மறையோர் புஜிக்காரே
அரனரை நோக்கித் தபம் ஆரணங்கே செய்குவோம்
அந்தப்படி யாகவென்று அப்பொழுதே தேறியே.

கடுக வழி நடந்து கைலயை அடைந்துமே
காளை வாஹனன் பாதத்தை கருத்தில் பதித்துமே
நந்திகேசன் தன்னை கண்டு நாடியே பணிந்துமே
நெடுமுச் செறிந்து நின்ற இந்திரனை பார்த்துமே.

தம்பதியாய் வந்ததிங்கே தேவனே புகலுமே
தேடிவந்த காரியத்தை நாடியே உரையுமே
இந்தவுரை தன்னைக்கேட்டு இந்திரனு மப்போது
மைந்தனசையாலே நானும் வருந்தி நடந்துமே.

கட்டம் 10. பெண்மயிலே மெட்டு.

வந்ததொரு காரணத்தை வானரசன் வழுத்திடவே
நன்று நன்று வந்ததிப்போ மக வுமக்கு உண்டாகும்

சிவனோடு உமையாளை சிந்தையிலே தானிருத்தி
தீவிரமாய் தபஸு செய்ய செப்புகிறேன் இந்திரனே.
ஊசிதன்னைத் தானிறுத்தி உத்தமமாம் தபஸு செய்தால்
புத்திரனுற்பத்திதனை பித்தனும் அருள் புரிவார்

நந்தீசர் சொல்லலுமே நாயகியும் இந்திரனும்
நதி தனிலே மூழ்கி வந்து நமசிவாயா என்றுரைத்து.
ஊசியை நிறுத்தியதில் ஒரு காலை தானூன்றி
அஞ்செழுத்தை நெஞ்சில் வைத்து அருந்தபஸு செய்யலுற்றார்

பிள்ளையருள்வாயென்று பெருந்தபஸு செய்திடவே
புற்றுக்கள் தான்படர்ந்து பெரிய மரமானதுவே
அத்தபஸை காணார்போல் அறனாரும் இருந்திடவே
பாதாளம் தோன்றவெட்டி பாங்காக அனல் வளர்த்து

ஐங்காதம் அனல் வீச அருந்தபஸு செய்யலுற்றார்,
சருகு தண்ணீர் புஜியாமல் சங்கரனை மனதிலெண்ணி
தேவ வருஷம் இரண்டாயிரம் தீவிரமாய் தவமிருந்தார்
தவமகிமை தானறிந்து சங்கரரும் பார்வதிக்கு

தயவாயாக இந்திரனுக்கு தாமருள்வோம் என்றுரைத்தார்
ஸபைகள் நிறைந்திருக்க தாக்ஷாயணி தேவியப்போ
புத்திரனில்லா செல்வம் தன்னை புண்ணியரே அளித்தீரே
கண்ணீருய் பெருக கண்டிலையோ கருணாகரா

இந்திரன் செய் கொடுமை என்று ஹிமவான் புத்ரி அறியாயோ
என்னை நோகக் காரணமேன் உன்மனம்போல் உதிக்கசெய்வோம்
என புகல ஈஸ்வரியும் ஏது குறை செய்தாலும்
கார்ப்பதும் நீர் கருணாகரா என கழரிடவே அறனாரும் அரன்

வெள்ளிமலை வீற்றிருக்கும் விடைதன்னை ஈசர் அழைத்துரைப்பார்
விரைந்து இங்கே இந்திரனை அழைத்துவாராய் பணிந்திடவே.

## கட்டம் 11. வந்தனாரையன் மெட்டு

தபஸை நிறுத்தி ஈசருரைதனைப் புகன்று
கடுகெனவே காரிகையுடன் கைலை சன்னதி அடைந்துமே
கடல்முர செக்காளம் தாரை தம்பூர் தேவர் மீட்டவே

இந்திரனை அழைத்து அப்போ ஈசர் முன் விடுத்து
வந்தரனார் பாதம் தன்னை வணங்கிச் சிரம்கூப்பியே
மன்றிலாடும் மழுக்கர நின்மலரடிதனை போற்றியே.

சிந்தை மகிழந்து ஈசன் தேவனை எழுப்பி
வந்தவகை எந்தனுக்கு வழுத்திடாய் வானரசே
என்றுரைக்க இந்திரனும் இளங்கொடியும் புகலுவார்.

புத்திர தாகத்தால் உந்தன் பொன்னடி பணிந்தோம்
கர்த்தனே எனக்களித்து காருமென்றுரைக்கவே
காளகண்டன் கைலைவாசன் கடுகியே வரம் ஈயவே.

சந்ததி அளித்து அப்போ சங்கரனாரும்
காமதேனுவை அழைத்துக் காவலன் பின் செல்லுவாய்,
தபசு செய்த இந்திரனுக்காய் தனையனை பெற்றுவருகுவாய்.

பாலனை ஈன்று நீயும் பாங்குடன் திரும்பாய்.
இந்தமொழி கேட்டுடன் இளம்பசு கலங்கியே.
இந்திரலோகம் செல்வதற்கு ஏற்குமோ என்னையனே.

எனப் புகன்றிடும் கன்றுக்கீ ஈசன் உரைப்பார்
இளம்பசுவே இந்திரனுக்கு மைந்தனை அளித்த பின்
பொன்னின் பூந்தேர் உந்தனுக்காய் ப்ரியமாய் அனுப்புவோம்.

இம்மொழி கேட்டு காமதேனு ஈசனை பணிந்து
இடிமுழக்கம் கடலலைபோல் இந்திரனைத் துடர்ந்துமே
இளங்கன்று வடிவாய் பசு இந்திரலோகம் சேர்ந்துமே.

சட்டம் **12**. நின்றதொரு மெட்டு.

வந்ததொரு கன்றை இந்திரன் தேவி வாரி எடுத்தணைத்து
ஈசர் தந்த செல்வமென்று இளங்கன்றை
இருபேரும் மகிழ்ந்திடவே.

நான்முகனார் பார்த்திருக்க தேவரெல்லாம்
பூமலர்கள் தான் சொறிய பூபாலர் போற்றிநிற்க
பட்டணத்தெல்லையிலே வந்துவிட்டார்.

எதிர்சென்று தேவரெல்லாம் இந்திரனை
ஏற்றமுடன் அழைத்து வந்து
சிங்காதனம் தனிலே இந்திரனும்,
சிறக்கவே தானிருந்தானிருக்க.

இந்திராணி தேவியவள் இளங்கன்றை
ஏற்ற செல்வமாய் வளர்த்து
நாமகரணம் செய்து மாசவந்தி என்று
நல்முகூற்த்தம் தன்னை செய்தார்.
அன்னதானம் ஸ்வர்ணதானம்
அந்தணர் அனைவர்க்கும் தான மீந்து
பொன்னாலே தும்புமிட்டு தேனுவுக்கு
பூஷணங்கள் தானணிந்தார்.
நவரெத்ன ஆபரணம் ஜவலிக்க
நாலுகால் குளம்புகள்க்கும்
முன் கொம்பு கோமேதகம் சுட்டியும்
பட்டமும் அலங்கரித்தார்.
திங்கள் பிறைபோலே கன்று திகழ்ந்து
சீருடனே தான்வளர
பாலூட்டி பரிவுடனே பெருமையுடன்
பாலனைப் போல் வளத்தார்.
இந்திராணி தேவியப்போ இளங்கன்றை
ஏற்ற பூஜை செய்திடவே.
சிந்தையில் சிவனைக் குறித்து தேவியும்
செப்புவாளக் கன்றினிடம்.

கட்டம் **13.** இப்படி இருக்கும் மெட்டு.

தான் மலடு ஆனதல்லால் தரணி மலடாச்சே
நீ மலடாய் நிற்பதற்கு நேர்ந்ததோ விதியே
ஊள்வினையால் வாடியவள் உள்ளமிக தளர்ந்து
உத்தமியும் மெத்த கண்ணீர் கர்த்தனை நினைந்து.
அத்தநருளால் அடைந்த அருங்கன்று இப்போ
மெத்த மலடாயிருக்க காரணமேன் நாதா
என்றுரைக்க இந்திரனும் இன்ப முகம் வாட
ஏந்திழையே நான் தபஸு இன்னும் செய்வேன் கேளாய்.
கானகம் நோக்கி நடந்து கடுந்தபஸு செய்வேன்
கைலைநாதன் அருளும் பெற்று கடுகியே வருவென்
பூங்காவனம் தேடி இந்திரன் புறப்பட்டானப்போ
கமண்டலம் புலித்தோலும் கையில் பிரம்புடனே.
கானடைந்து காவலரை கருத்திலே நிறுத்தி
அஞ்செழுத்தை நெஞ்சில் வைத்து அரனை மிகநினைந்து

அருந்தபஸை அறிந்து தேவ முனிவரெல்லாம் கூடி
அஷ்ட திக்கு பாலர் சந்திர சூரியரும் ஓடி

மும்மூர்த்தியை பணிந்து முறையிட்டு அலற
முக்கண்ணனே ஸர்குணனே. சங்கைதனை தீரும்.
மகனாசையாலே மன்னன் மாள்வதறியீரோ
மனமிரங்கி மன்னனுக்கு மகவையளிக்கீரோ.

ஈஸ்வரரும் மனமகிழ்ந்து ரிஷபந்தன்னை அழைத்து
வள்ளுவனை இப்பொழுதே வரவழையும் என்றார்.
வந்ததொரு வள்ளுவனை பார்த்து பரமனுரைப்பார்
சித்திர புத்திரர்தனை அழைத்து சீக்கிரம் வாவென்றார்.

பாதமதில் பணிந்த சித்திர புத்திரனை ஈசன்
தேசம் விளையாடிவந்தா கணக்கனே என மகிழ்ந்தார்.

## கட்டம் 14. அருமை தம்பி மெட்டு.

கணக்கில் பெரியவனே காரிய வல்லபனே
கடுந்தபம் செய்கிறான் தேவ ராஜன்
மைந்தனை வேண்டியே வருந்தி தபம் செய்து
மூவுலகிலும் அனல் தகித்திடுதே.

இந்த உரைகேட்டு எழில் கணக்கரும் அப்போ
இந்திரர்க் கெவ்விதமும் பிள்ளை இல்லை என்றார்.
ஈசரது கேட்டு இந்திரன் பாபம் போக்கி
ஏற்ற பாலகனாய் நீ ஜனித்திடுவாய்.

பாலகனாய் பிறக்க, பரமன் விடை கொடுக்க
அவன் வயிற்றினில் நான் பிறக்க தர்மமல்லா.
அந்த மொழி கேட்டு அரனும் அக மகிழ்ந்து
எந்தவிதமும் மைந்தன் இந்திரற்கு

செந்தாமரை பூற்கும் பொய்கை தனிலே சென்று
தாமரை பூவாக தழைந்திடுவீர்.
இந்திராணி தான் வளர்க்கும் இளங்கன்றும் அப்பொழுது
தாகவிடாய் கண்டு தவித்து வரும்.

தண்ணீருடன் கலந்து தாமரை உள்சென்று
ஆவின் உதரத்தில் நீர் அவதரிக்க,

ஏடெழுத்தாணியுடன் எழுலோகக் கணக்கும்
இன்னுமற்றமனேக இதக் கணக்கும்,
புத்திரன் கைக்கொண்டு போவாயென உரைத்து
பூரித்து மகிழ்ந்து விடை கொடுத்தார்.

மகர குண்டலம் மின்ன மாதா பாதம் பணிந்து
பாரமாம் பட்டோலை தானிடுக்கி
பார மறியாமலே பத்ம மலராக
பொய்கையில் சென்று மலர்ந்திருந்தால்

சித்திரை மாதத்தில் சிறந்த பௌர்ணமியில்
ஆதித்த வாரமதில் அவதரிப்பாய்.
ஆகாச தேரேறி அரனர் மகனுமப்போ
வாவிதனை அணுகி வந்திருந்தார்.

## கட்டம் 15. ஏழையபிமனுக்கு மெட்டு.

செண்பக மலர்புனை வாவிதனில்
புத்திரர் புஷ்பமாய் அவதரித்தார்.
முத்துக்கள் பவழம் முழங்கும் வாவி
சங்கு சூல்கொண்டு தவழும் வாவி.

வஜ்ரவைடூரியம் கோமேதகம்
புஷ்பராகம் பொங்கும் பொய்கை தனில்.
அன்னம் தாராக்கள் அமர்ந்தாட அ
வானரங்கள் பாடி மகிழ்ந்தாடும்.

மாடப்புரு மான் மரு ண்டோடும் வாவி
புனுகு ஜவ்வாது கமழ் கஸ்தூரி
பொய்கை யிலங்கும் கமழ்ந்திருக்கும் க.
பகைமறந்து விலங்கு பரிந்தோடும்

கவரிமான் கலந்து விளையாடும்
புஷ்பம் பொலியும் காய்கனியுமங்கு
சென்னல் விளைந்து சிறந்திருக்கும் சி.
மலர்வகை கணக்கில்லா மணம் வீசும்

ஏலம் கிராம்பு ஜாதிக்காய் பத்திரியும்
தேனருவி வந்து மிகபாயும்.
வண்டு தும்பி மந்தி பாய்ந்து மதுவுண்ணும் தனிவாவி
வளங்கள் சிறந்தவொரு பொய்கை தனில்.

சந்திரர் சூரியர் ஜொலிக்கும் தனிவாவி
விஷ்ணு ப்ருமமற் முனிவர் மூழ்கும் வாவி
கன்னியர் கலந்து களிக்கும் வாவிக
பழவினை பறந்தோடும் தீவினை திடுக்கிடும்

பிணிகள் பிரிந்திடும் பெரும் வாவி
முதிர்ந்தவர் முதுமை பறக்கும் வாவி

## கட்டம் 16. எத்தனை தூரம் மெட்டு.

இந்திராணி தேவியும் இன்பமாய் வசனித்து
நித்திரை வசத்தினளாய் நேரிழை சயனித்தாள்

ஸொப்பனங்கள் கண்டாளே
துயரம் மிகவும் விண்டாளே
அகமகிழ்ந்து கொண்டாளே
அறிவையரிடம் விண்டாளே

மைந்தன் மடியில் கண்டேனே அமுதம் சுறக்க நின்றேனே
பசுமரங்கள் பூத்துச்சொறிய பகவன் அருளும் நிறைந்தேனே

கணக்கெழுதும் கண்மணி கையிலிருக்கக் கண்டேனே
கனா பலிக்க கருத்திலே கனதெய்வங்களை நினைந்தாளே.

தான தருமம் செய்தாளே தரணிபனை நினைந்தாளே
ஈசனைத் துதித்தாளே இருபதம் பணிந்தாளே.

சூரியரும் கன்றினை தும்புதரித்து விட்டாரே
துள்ளியோடி துரிதமாக தும்பறுத்துச் சென்றதே.

இந்திராணி கண்டாளே முகம் துடைத்தணைத்தாளே
என்னைப்போல் இருந்திடாமல் இனத்துடனே மேய்ந்துவா.

கண்ட பயிரை தின்னமல் கடுந்தூரம் செல்லாமல்
துஷ்ட மிருகம் அண்டாமல் துரிதமாக வந்திடாய்.

அந்திப் பொழுது மயங்குமுன்னே அண்டையிலே வந்திடு
என்றுரைத்து இளம்பசுவை எல்லைகடத்தி விட்டாளே.

## கட்டம் 17. தண்டை சிலம்பு மெட்டு.

காலில் சிலம்பு கலகலன சலங்கை கொஞ்சியே சப்தமிடா
ஆபரணங்களசைந்து விளையாட அடிவைத்து அன்னம்போல் நடந்து

பொற்புல்லும் தின்று புனல் நோக்கி, புத்தி மயங்கியே நாவறண்டு
தாகவிடாய் கொண்டு தான்பறந்து, வாவியை தேடி வரும்போது

இரவியும் அப்போ இளம்பசுவை, தாமரை வாவிக்குத் தானழைத்து
தண்ணீரருந்தும் சமயத்திலே, தாமரை மலரை காட்டிடவே.

நீருடன் மலர் நிமைப்பொழுதில், நேர்மையுடனே உள் சென்றிடவே
மதிமயங்கியே சூலாகி வாயில் நுரைதள்ள வால் வீசி

முக்கி முனங்கி முகம் வாடி முன் வயிற்தள்ளி நடைநடந்து
எல்லைதனில் வந்து ஏங்கிவிழித்துமே செட்டி தெருவில் படுத்ததுவே.

கண்டவரெல்லாம் கடுகிவந்து கானகத்தில் விஷம் தீண்டியதோ என
புலம்பியே எல்லோருமாய் கூடி ஈசன் திருநீற்றை அள்ளியிட்டார்.

செட்டிச்சி பெண்கள் சிறக்கவந்து சுற்றிலும் வளைந்து நின்றுகொண்டு
பாலன் வடிவமாய் தோணுதென்று பகர்ந்ததிடுவாளதிலொருத்தி.

சந்தண குழம்பு தான்பூசி கழுநீரும் புல்லும் கலந்து வைத்து
ஆலவட்டம் கொண்டனல் தளர்த்தி அருகிருந்தவர் பேசலுற்றார்.

தாகம் தெளிந்து விழித்தவுடன் தளர்நடையாக தான் நடந்து
மண்டபமேறி மணியடித்து மாணிக்கத் தூணோடு சாய்ந்திடவே.

## கட்டம் 18. கண்மணியாம் ஸாவி மெட்டு.

அசையா மணிஓசை கேட்டு அமராவதி
இந்திரனில்லா வேளையில் ஏது சேதியோ
போய் புலன் விசாரித்து கடுகிவருவாய்.

உத்தரவு என்று தாதி ஓட்டமாகவே
ஓடிவந்து தேவியண்டை சேதியுரைத்து
நாம் வளர்த்த நல்பசு நலிந்திருக்கம்மா

எண்ணத்துலேயா பசு எது வென்றறிவேன்.
அடையாளம் கூறிட தேவி அலறித்துடித்து

சிங்காதனம் தன்னைவிட்டு சீக்கிரமாக
காராம் பசு அண்டையிலே கடுகியே வந்தாள்
என்னசெய்வேன் இந்திரனில்லா இவ்வேளைதன்னில்
வாரி எடுத்து பசுவை மார்போடணைத்தாள்.

இடையரங்கு கூடி வந்து ஏற்ற சூலென்க
இன்று நாளை ஈனுமென்று இன்மாய் சொன்னார்
பசுவின் மயக்கமதை பார்த்து தேவியும்
கோவிலுக்கு முன்னே கூட்டி கொண்டு வந்துவிட்டார்

பரிகாரி வந்து பல மருந்தெடுத்து
பசுவுக்கு ஊட்டியவர் பயணமானர்
சிவனை நினைந்து தேவி சிந்தை கலங்கி
சீறி அழுதிடவே அரனரும் கேட்டு

கோதைக்கு குறியுரைத்து கடுகிவா வென்ருர்
உமையவளும் குறத்தி வேஷ குடுக்கை எடுத்து
கொக்கிறகு சூடி பலமணி யணிந்து
குலுங்க நகைத்து பரமனைப் பணிந்தாள்.

கட்டம் 19 கானகத்து மெட்டு.

குன்றுமலை இடைச்சி கொடி இடைச்சி குறியுரைப்பாய்
பரமனுரைக்க தேவி பரிகாச குறியுரைப்பாள் ப

மண்ணும் சுமந்திருப்பீர் மத்தாலடியும் பட்டிருப்பீர்
ஆரூரில் சோழன் மகனை தேறில் நின்று கார்த்ததுண்டோ. தே

தாஸி வேடன் ஸுந்திரனை தூது சென்றழைத்ததுண்டோ
விரல்முண்ட பக்தனுக்கு முக்தியளித்ததுண்டோ

பத்மா சூரனுக்கு பயந்து ஐவரளியில் ஒளித்ததுண்டோ
அச்சுதனும் கார்த்திடவே அங்கே வெளி வந்ததுண்டோ.

அமிர்தம் அளித்து வந்த மோஹினியைக் கண்டுகூடி
அக்ஷணத்தில் ஹரிஹர புத்ரனை ஈந்ததுண்டோ.

சாக்ரகியார் பக்திகண்டு கல்லாலடியும் பட்டு
கண்ணப்ப னெச்சில்தன்னை கண்டோர் நகைக்க உண்டு

விஜயனுடன் போர் புரிந்து வில்லும் அளித்துகந்து
சீலாவதிக்கிரங்கி செல்வனையளித்ததுண்டோ.

கௌரி பெண்ணுக்காக வேண்டி குமரனுகி கிழவனுகி
குழந்தையாக குவலயத்தில் கூடியே சார்த்ததுண்டோ.

பாணபத்ர பக்தனுக்காய் பாடி மகிழ்ந்ததுண்டோ
விறகும் சுமந்து. என்னை வீதி யெங்கும் சுற்றவைத்து

இந்தபடி குறியுரைத்து ஈஸ்வரி நகைக்க ஈ
உமையவளே குறத்தி உனக்கு குறியுறைப்பேன் பெண்ணே. உ

உழுது திரியும் பன்றி உந்தனது அண்ணனன்றோ
இடைச்சி வீட்டிலடியும்பட்டு மணிக்கயத்தால் கட்டுபட்டு

வெண்ணை திருடியுண்ட வெறியனுட தங்கையன்றோ
புன்னைமரந் தனிலே போயொளியும் தீரனன்றோ.

உன்வயிற்றில் பிறந்த பிள்ளை வரிசைகளை சொல்லுகிறேன்
உந்தனுக்கு மூத்த மைந்தன் பெருவயிரன் தானுமுண்டோ

பின்னையொரு மைந்தன் பழநிமலை சென்றதுண்டோ
தாயோ பெருநீலி தானடங்கா ஆங்காரி.

பித்தனுக்கே பெண்டிருந்து பிழைமோசம் போனவளே
இப்படிக் குறியுரைத்து இருபேரும் மகிழ்ந்திடவே.

தேவியும் விடைகள்பெற்று வானுலகம் விட்டிறங்கி
தேவேந்திர லோகம் சென்று வானவர்கோன் கோவில் வந்தாள்.

**கட்டம் 20** மானும் மறைய மெட்டு.

இந்திராணியை தேடி ஈஸ்வரி வரும்போது எழுந்துமே ஓடிவந்து
இஎ வாராய் குறமாதே பாராய் குறத்தியம்மா பசுவும்பிழைத்திடுமோ

நல்லகுறி சொல்வாய் நவரெத்னம் அளிப்பேன் நவ நவமாயுனக்கு
ஆஹா என குறமாது குறிசொல்ல ஆசனத்திலமர்ந்தாள்.

பஞ்சமுகன் தேவி புஞ்சிரிப்பு கொண்டு குஞ்சரனை பூஜை செய்ய
ப்றத்யக்ஷமாய் பாலன் வரவே குறமாது சிங்கி அடித்து சிரித்தாளே.

என்குறி தப்பாது என் மைந்தன் விநயகன், சிறுவனும் முருகனடீ
கெங்கை சடையீசர் பத்தினி பார்வதி பண்பாய் குறியுரைப்பேன்

வானுலகமாள மகன் பிறப்பானுனக்கு
மயக்கத்தை விடுவாயே
வளர்த்த பசு வயிற்றில் மைந்தன் உதித்திடுவான்
வருத்தத்தை ஒழிப்பாயே.

சித்திரை மாதத்தில் சிறந்த பௌர்ணமியில்
ஆதித்ய வாரமதில்
பூனூலும், புஸ்தகமும், பொற் குண்டலம் துலங்க
புகழுடன் அவதரிப்பான்.

ஆயிரம் கிங்கிலியர் அசைக்கவொண்ணு
ஏடு எழுத்தாணி கைபிடித்து
நெத்தியில் வெண்ணீறும் ரத்னமுடி சூடி
சித்ர புத்திரரும் ஜெனித்திடுவார்.

எறும்பு கடை யானை எல்லாம் எழுதவல்ல
புண்ணியன் பிறப்பாண்டி
விஷ்ணு சிவனுக்கும் வகுக்கும் பிர்மாவுக்கும்
வகைக் கணக்கெழுதிடுவான்.

அரனர் கருவேலம் அவன் கையிலே இருக்கும்
அமராவதி தேவி இன்பம் பெருகிட
இருதோளும் பூரித்து
கும்பலாய் பொன் குவித்தாள்.

பவுன் பணம் வேண்டிலேன் பறையன் படைத்திலேயோ
நிறை நாழி முத்தெடென்ருள்
அன்பிருந்தால் போதும் சென்று வருகிறேன்
ஸதனே வாழ்ந்திருப்பாயென்ருள்.

சட்டம் 21. ஐலலோ மெட்டு.

பாலன் பிறப்பானென்று பறையறையா ப.
வானுலக தேவரெல்லாம் மகிழ்ச்சியுடன் ம.
முத்துக்கால் நாட்டி பவழச்தூண் நிறுத்தி தா.
தங்கத்தா லோடுசெய்து பந்தலிட்டார் ப.

தெரு வீதி யெங்கும் திகழ்ந்திடவே
வாழை கமுகு வரிசை நிறுத்திடவே நி.
தேவாதி தேவரெல்லாம் கூடிடவே கூ.
அந்தணர் தவமுனிவர் அடுத்திடவே அ.

பதினெட்டு வாத்தியம் படித்திடவே
பட்டணத்து ஜனங்களெல்லாம் பார்த்திடவே
நல்லதொரு வேளைதனில் நல்கணக்கர் ந.
நல்குறத்தி உரைத்தபடி ஜனித்திடவே.
மங்கையர்கள் வாழ்த்தி குரவையிட
மாணிக்கச் சங்கமது ஊதிவர ஊ.
கன்னியர்கள் முத்தாரத்தி எடுத்துவர எ.
அர்த்தநாரி அருகிருந்து கைகொடுக்கா
ஆவின் வயிருவிட்டு அரநருளால் அ.
அசைக்க ஒண்ணு புஸ்தகமும் கைபிடித்து.
மின்னொளி போல்பொன் தலத்தில் பிறந்திடவே.
பார்த்த தேவரெல்லாம் ப்ரமித்திடவே
பாவ புண்ணியம் ப்திங்கெழுத வந்துதித்த
பாலனை பார்த்து பூரித்து உரைத்திடவே.
பிரம்மா பிறைசூடியோ பாரளந்தவனோ
நமனுக்கதிகாரியாக வந்தவனோ
பூமாரி வாத்தியங்கள் பொலிந்திடவே.
அமிர்தம் தன்னை அரன்பாலனுக்கூட்டிடவே
தீர்த்தமாடி பட்டுடுத்தி தேவியவள்
அருமைந்தனை அணைத்திடவே பால்பெருகி
பச்சுடம்பாய் தாதியர்கள் தாங்கிடவே
தங்க மலரணையில் கிடத்திடவே.
காயம் கடைசரக்கு கூட்டி அளித்திடவே.
மைந்தனை கையாலெடுத்து ஒளவையப்போ
மதிமுகம் துடைத்து கைகால்தான் துருவி
தொப்புளறுத்துத் துயிலாட்டி எண்ணையிட்டு
பாலனை வளர்த்தி பஞ்சாடயிலே
தேவேந்திரன் வரவை எதிர்நோக்கிடவே.

## கட்டம் 22. பரமசிவா வாரும் மெட்டு.

தேவராஜன் வந்தான் சிறுவனை வாரி அணைந்தான்
ஆவலுடன் அந்தணரை அழைத்து
பிறந்த விபரம் தன்னை அறிந்து
நாமகரணம் செய்ய அப்பொழுதே ஆலோசித்தான்.

சித்திரையில் பிறந்ததினால்
சித்திரா புத்திரனென்றழைத்து
சீருடன் தாராட்டியவர் ஸப்ரமஞ்ச தொட்டிலிட்டார்.
அனைபேர்களும் கூடி ஆவின்மகனை பாடி.

## தாராட்டு.

ஆராரோ ஆராரோ அரனார் திருமகனே
சித்திரத்துதித்தவனே, சீருடைய கண்மணியே
காமதேனு வயிற்றில் கன்றாய் பிறந்தவனே.
கைலாச நாதருட கலையால் சிறந்தவனே
இந்திர னிந்திராணியர்க்காய் ஏற்றமுடன் வந்துதித்த
எழுத்தாணி பட்டோலை இடுக்கிப் பிறந்தவனே.
அயிரம்பேர் கூடி அசைக்க ஒண்ணா புஸ்தகமும்
காதிலிரு குண்டலமும் கனக்க பிறந்தவனே.
பூவாக பொய்கையிலே பூரித்த பாற்குடமே
புண்ணிய பாவமெழுத புத்தி தெரிந்தவனே
ஆவின் வயிறுவிட்டு அரன்பாதம் தானிணைந்து
அர்க்க நுதித்தாப்போல் அமரர்குறை தீர்த்தவனே.
உன் திருவழகை கண்டு தேவேந் திரன் களித்து
செல்வக் களஞ்சியத்தை திறந்துமே விட்டார்காண்.
ஆராரோ ஆராரோ ஆணழகே ஆராரோ
சீரால் சிறந்தவனே தெய்வத் திருமணியே.

## முன் பாக்கி.

தான தர்மங்கள் செய்து தனையனைக் கொஞ்சி மகிழ்ந்து
அளவற்ற ஆசையுடன் அமரர்கோன் வீற்றிருக்க
காமதேனு அடுத்து அமிர்தம் கொடுக்க நினைத்து
பாலகனை ஈன்றளித்த பாற்பசுவும் அன்னேரம்.

தன்னினமில்லாதிருக்க தனையனைக் கொம்பாலிடிக்க
நக்கிக்கொடுத்திடவே நம்மினமாயில்லை யென்று
நினைவு மறந்தொருநாள் நிமலனை மிதித்திடவே
தேவிகண்டு திகைத்தாள் சிறுவனைக் கையிலெடுத்தாள்.

கோபம் கொண்டு இந்திராணி கோவினையடித்திடவே
சிவனே சரணமென்று தேவனே நீர் சாக்ஷி என்று
பசுவும் துடித்து அழவே, பரமனையப்போ தொழவே.

பூரணரும் பொன்தேரனுப்பி பசுவை அழைத்துக்கொள்ள
பரமனுட தாள்பணிந்து பசுவும் சேதி சொல்லிடவே
பாலனை ஈன்றளித்தேன் பாவி என்னை அடித்தாள்.

பதரவேண்டாம் பால்பசுவே பாலனை யளித்திடுவேன்
அண்டையிலிருந்து நீயும் அகமகிழ்ச்சி கொண்டிடுவாய்
ஈசருரைக்க கன்று இன்பமாய் மனமகிழ்ந்து.

தேவருலகம் தன்னில் பாலன் பசித்து அழ
பாலுக்காய் பசுவைத் தேடிபார்க்கையிலே காணமலே
தேவி மிகநொந்தாள் இந்திரன் மிகவும் நலிந்தார்.

மற்றுமொரு பாற்பசுவின் பாலமுதை மைந்தனுக்கு
குற்றம் அணுகாதபடி கொடுத்து வளர்த்தனரே
பசுவை தேடி அலைந்தார் பாரிலதை மறந்தார்.

## கட்டம் 23 பாணுபத்ரா மெட்டு.

தாதி முலைப்பால் கொடுத்து தனையனை தானே வளர்க்கலுற்றார்
பாலுண்ணவோ நான் பிறந்தேன் பாற்கணக்கெழுத வந்தேன்
என்றுரைத்த மைந்தனையும் பள்ளியில் படிக்கவிட்டார்.

பாலனை பார்த்து குருவும் அரிஓம் என உரை என்று சொல்ல
அதற்கே பொருள் புகல்வீர் அருவே குருவே என
மிழித்து மிடறியவர் மெய்நடுங்கத் தானுரைப்பார்.

ஓம் என்னும் அக்ஷரத்தின் உட்பொருளை உத்தம பாலனே அறியேன்
பாலனும் சிறித்து அப்போ கோலாகலமாய் புகல
குருவும் குடல் நடுங்க குற்றம் பொறுப்பாய் பாலா.

பாலனும் பலகணக்கு மூவுலகும் பாங்குடனே ஓதிடவே
குருவின் கணக்குவர குறிப்புடன் பாலகனும்
தந்தை தவசத்தில் நீர் தப்பிதங்கள் செய்ததுண்டு.

அக்கணக்கெழுதி வந்தேன் ஆசாரியரே,
ஆகாதகார்யமென்றே கேட்டு கிடுகிடுத்து இந்திரனிடம் ஏகிசென்று
பாலன் உரைத்ததெல்லாம் பதறியங்கே உரைத்து.

வித்தை பூர்த்தியாச்சுதென்று புகன்று விடைபெற்று ஏகிடவே
தந்தை கேட்டு மைந்தனையும் தானே அருகழைத்து
வாரி முகம்துடைக்க பாலன் வார்த்தைகளுரைக்கலுற்ருர்.

இந்திரனை நோக்கி இளம்பாலனும் இதமாய் உரைக்கலுற்ருர்
எத்தனை நாள் இங்கிருப்பேன் என்கணக்கெழுத வேண்டும்
போகவிடை தாருமென புலம்பி இந்திரனும் சொல்வார்.

பாலவயதுனக்கு பாலகனே பாற்கணக்கெழுதுவாயோ
பால்மணமாரு செல்வ இனி காலம் எப்படி கழிப்போம்
இங்குமங்கு மாயிருப்பேன் என்னையாவே என்றுரைத்து
தாயிடம் விடைகள்பெற்று தனயன் தாவி ரதம் ஏறிடவே.

## கட்டம் **24**. கோகுல நகரி மேட்டு.

புத்திரன் சென்றனன் பொற்பசு அண்டையில்
பரமனை பணிந்து துதித்திடவே தேவியும்
மகனை வாரி எடுத்தணைத்து சிறப்புடன் வாழ்த்திடவேரி.

பாலனை முகந்து பசு கொம்பால் தடவியே
இரங்கியே முகம் நோக்கி யிருக்கையிலே
அந்தவேளை தனிலே அரனர் புத்திரரும் சேதியுரைக்கலுற்ருர்.

போனதும் பிறந்ததும் புதுமையாய் வளர்ந்ததும்
பசுவை அடித்ததுவும் புகன்றிடவே
மற்ருேர் பசு பாலுண்டு மகிழ்ந்து விடை கேட்டதும்
யாவும் உறைக்கலுற்ருர்.

இங்கிப்படி இருக்க இந்திரன் இந்திராணியுடன்
சிவன் கைலை வந்து சேர்ந்துரைப்பார்
என்னை பிரிந்துவந்த மைந்தனை கூட்டிபோக
மகாதேவா வந்தோமென்ருர்.

தாயிடம் வந்ததும் தர்மமல்லவோ இந்திரா
உன் பிள்ளை எங்கே என உரைத்திடவே
தான் செய்த தவறுணர்ந்து தாளிணையில் பணிந்து
தனையனை வேண்டி நின்றார்.

உலக கணக்கெழுத உத்தமன் பிறந்தான்
இங்குமங்குமவன் இருந்திடுவான்
மனஸ்தாபம் தன்னைவிட்டு மகிழ்ந்து விடைகள் பெற்று
மன்னன் இருப்பிடம் சென்றான்.

எமனை வரவழைத்து கலியின் உபத்திரவம் கலங்காமலிருக்க
கணக்கெழுத சித்திரபுத்திரனை அளித்தேனென உரைத்து
சிவனும் விடை கொடுத்தார்.

தர்மனுடன் நடந்து ப்ரும்மபுரத்தில் வந்து
இருபேரும் கூடியே பணிந்திடவே
சிவனை நினைப்போரை சிதைக்காமல் விட்டு நீயும்
பாபியை அணுகிடென்றார்.

## கட்டம் 25. துவாரகாபுரி பட்டண மெட்டு.

ரெதமேறி கணக்கரும் எமனும் கடாவேறி எ.
முரசு ஒலித்திடவே இந்திரலோகம் வந்திட்டார்.

பாரிலுள்ள தான் கணக்கை பதிவாயெழுதியே
பாவிகளாய் நின்றவரை பகுந்து நிறுத்தியே.

அரன் பூஜை செய்தவரை அண்டி பணிந்துமே
அவனியில் அனியாயம் செய்தோரை அழித்துமே.

எமதண்டனைகள் செய்து ஏழாம் நரகில் தள்ளியே
வீதி வீதியாய் கணக்கு விவரமாய் எழுதியே.

புண்ணியம் செய்தவரை பொன்னின் தேரிலேற்றியே
பரமன் பதம் அடைய பதிவாய் எழுதியே.

இப்படி இருவருமாய் எள்ளளவும் தப்பாமல்
இந்திரனார் மாளிகையில் இவர்கள் நடத்திட

தந்தை தாயாரை வணங்கும் தனையனை வாழ்த்தியே
கன்னல் மொழிமாது கனிவாயில் முத்தமீயவே.

மங்கள ஸ்நானம் செய்வித்து மகிழ்ந்து மலர்சூடியே
சிவபூஜைகள் முடித்து தானங்களுமீயவே.

பூஷணங்கள் தானணிந்து போஜனசாலை சென்று
புண்ணியரும் வீற்றிருக்க பொற்கொடியும் உட்சென்று

தலைவாழை இலை அறிந்து தனையனுக்கிட்டிட
கறிவகை உள்ளதெல்லாம் கண்மணிக்களித்திட.

உண்ணென்று உத்தமி சொல்ல மகனுர் முகம்நோக்கி
உண்டால் உன்வயிற்றில் நானும் பிறப்பேன்காண் மாதாவே.

இம்மொழி கேட்டிடி இடித்து பஞ்சணையிலே சென்று
பைங்கொடி பரதவித்து பதறி அழுகவே.

## கட்டம் 26. பெற்றெடுத்த தந்தை மெட்டு.

பாலனெழுந்தோடி வந்து பாலமுதம் உண்ணவென்று அழைக்க
தாகம் தெளிந்ததுபோல் தையலரும் சோகமிக நீங்கி

திருப்தியாய் அன்னம் புஜித்து இருவரும் சிம்மாஸனத்திலிருந்து
மைந்தனிடம் இந்திராணியும் மனக்கிலேசத்துடனே
அவளுரைப்பாள்.

அற்ப குற்றம் கண்டிடாமல் ஐயனே நீ எழுதிடவே வேண்டும்
தாயே தர்மம் தவறி நீரும் தலைவாழை இலை அறுத்ததுவும் குற்றம்.

இப்படி இவருரைக்க எமனுமப்போ உடனழைக்கக்கண்டு
விடைதாருமென்கலுமே எமனைக்கண்டு இந்திரனும் உரைப்பார்.

முன்னுல் நீர் நடந்திடும் என் மைந்தன் பின்னுல் வருவான் என்றுர்
அந்தப்படி ஆகவென்று பூவுலகில் போகலுற்றுர் தர்மன்.

இப்படி இங்கே இருக்க பூவுலகில் மிருகண்டரிஷி அப்போ
புத்திரனை வேண்டியல்லோ பெருந்தபசு செய்யலுற்றுர் கேளீர்.

சடுந்தபஸு செய்யலுமே காளகண்டர் மனமகிழ்ந்து வரவே
காளை வாகனத்திலேறி கடுகி வந்து நிற்கலுமே பரமன்.

என்னவரம் வேண்டுமென்று மிருகண்டனைக் கேட்டிடவே
உடனே மைந்தனை அளித்திடுவீர் மகாதேவா என்றுரைத்து
பணிந்தான்.

கல்வியறிவில்லாத கசடனை புத்திரனே வேண்டும்
அறிவிற் சிறந்தவனே அற்ப ஆயுள் படைத்தவனே வேண்டும்.

அறிவுள்ள புத்திரனய் அவனியில் தருகவேணும் ஈசா
ஈரெட்டு பிராயமுள்ள மைந்தனை அளித்தார் மகாதேவர்.

தவமிகுந்த புத்திரனய் தயவுடனே தந்து
ஈசன் நிற்க பாதத்தில் பணிந்து மிருகண்டன்
பக்தியுடன் துதிக்கலுற்ருர் அப்போ.

ஈசனும் மனந்திடவே இல்லறம் திரும்பி வரக்கண்டு
தேவி சென்று எதிரழைத்து
திரமுடனே வாழ்ந்திருக்கும் நாளில்.

## கட்டம் 27. காலையில் கண்ணன் மெட்டு.

மார்க்கண்டனும் பிறந்து வளர்ந்திடவே
சாஸ்திர புராணமெல்லாம் படித்திடவே
சிவபூஜை செய்துமிக சிந்தையை நிறுத்தியே
தேவனை அனுதினம் பணிந்திடவே. மகா தே,

ஈரெட்டு வயது நிறைந்திடவே
இருமுதுகுரவர் நொந்து புலம்பிடவே
சித்தம் கலங்காதிருங்கள் சிவனை நினைந்திடுங்கள்
தீங்குகளொழிந்திடும் அவனருளால்.

அரஹரா சிவ சம்போ ஐயனே காருமென்னை
ஆலமுண்டோனே எனக்கருள் தாரும் என்று
சிவ நினைவாய் இருந்து பூஜைகள் செய்து
இருக்கையில் எமன் அங்கு சென்றிடவே.

ஈசனுரைத்த வயது இன்றுடன் உந்தனுக்கு
இற்றது எந்தனுடன் வருவாயே
ஈசன் பாதத்தைவிட்டு இழியேனென உரைக்க
பாசக் கயிற்றினலே இழுக்கலுற்ருன்.

அரனை சேர்த்து அணைத்து ஐயனே காருமென்று
அபயம் அபயமென்று அலறிடவே.
எமனை காலாலுதைத்து என்றும் பதினறாக
மிருகண்டு புத்திரனுக்கு அனுக்கிரகித்தார்.

ஈசன் அடியவரை இடற்செய்த எமனுக்கு
ஏற்றதண்டனை ஈசன் அளித்திடவே.
பூமிபாரம் தாளாதே ப்றும்மனிடத்தில் சென்று
புலம்பி நின்றாள் பூமாது அப்போ.

நாராயணரைக்கண்டு நவிலுமென உரைக்க
ஆரமுலை மாது அடிபணிந்து
காரணத்தை விண்டு கடுகி விடைகொள்ள
கர்த்தனும் கணக்கரைக் கண்டுரைப்பார். ஜெக. க.

### கட்டம் 28. உத்தரவு பெற்று மேட்டு.

இந்திரனிடம் விடைவாங்கி ஈசனிடம் சென்றிடவே
வாரி எடுத்தணைத்து பாலனை மடிமீதிருத்தி

நன்மை தீமை தானெழுதி நாடுசுற்றி வந்தீரோ
என்றே களிகூறிடவே ஈசனும் மகிழ்ந்திருந்தார்.

தேவரெலாம் கூடிருக்க ப்றும்மனும் அருகிருக்க
அச்சுதனும் அரனை பணிந்து அப்பொழுதெடுத்துரைப்பார்.

பூமிபாரம் பொறுத்திடாதே புலம்புகிறாளுத்தமனே
காலனைப் பிழைக்கச்செய்து காருமையா ஸல்குணனே.

ப்றும்மாவும் அந்நேரம் பரமனிடம் தானுரைப்பார்
ஈரெட்டு வயதென்றே எழுதின கணக்குப்படி.

காலத்தையறிந்து நமன் கடுகிவந்தான் கருணாகரா
தவத்தை மிக பாராமலேதான் மாண்டானும்மாலே.

புத்திகுறைவினாலே பிழைசெய்த தர்மன் தன்னை
பிள்ளை குற்றம் பொறுத்திடுவீர் புண்ணியரே என்றுரைக்க.

இப்படியே வானவர்கள் எல்லோரும் முறையிடவே
சித்தம் இறங்கியப்போ சிவனாரும் சொல்லுகின்றார்.

தான தர்மம் செய்வோரை தவபூஜை முடிப்போரை
வைகுண்ட நாதர் பாதம் வணங்கித்துதி செய்வோரை.

நாடாதே என்று சொல்லி நமனை எழுப்பிவிட்டு
நமன் வாய்புதைத்து தண்டமிட வாழ்த்தி விடைகொடுத்தார்.

எமனும் கணக்கருமே ஏகினர் பொன்னுலகம்
இருந்து அரசு செய்து இன்பமாய் வாழ்ந்திருந்தார்.

**கட்டம் 29. நல்வாக்கு நீ, மெட்டு.**

சித்திர புத்திரனர் சிறப்புடனே இருந்து
திருந்தவே நன்மை செய்தோர் சிறந்த வழிவருக

வடக்கே வாசல் அமைத்து மாணிக்கப் பந்தலிட்டு
குளிர்ந்த மலர் பொய்கையுடன் தண்ணீர் பந்தலமைத்து.

புண்ணியம் செய்தவரை போகும்வழி இதென்றார்
கைலைவழி இதென்றார் காவல் மிகவும் இட்டார்.

கீழ்வாசல் தன்னருகே ஞானநிஷ்டை செய்வோர்கள்
தரிசிக்க வருவதற்கு தான் திறமாய் அலங்கரித்தார்.

வெள்ளிக் கதவும் இட்டு வேதியரைக் காவல்வைத்து
வைகுண்ட நாதரடி வணங்கித் துதிப்பவர்க்கு.

விந்தையாய் மேற்கு வாசல் விருப்பமாய் செய்துவைத்தார்
பக்தர்கள் பரமனுட பாதம் அடைந்திடவே

பதிவாகவே அமைத்து பார்த்திருந்தார் உத்தமனர்.

விருத்தம்

தெற்கு வாசல் வழியில் முட்பரப்பி நெருப்பெரிய
சுண்ணாம்பும் சுடுமணலும் பெருங்கழுவும் நாய் நரியும்.
அட்டை புழு கட்டெறும்பும் கடுவாய் கடுந்தேளும்
கடிய மணல்பரப்பி குளுந்த நிழலின்றி கொடியவரை தண்டிக்க.
மேற்கே ஒரு வாசல் வைத்து பாவியரை காவல் வைத்து.
செப்புத்தூண் செக்குலக்கை அணலெறிய அருகிருத்தி
குரைக்கும் தலைபேய் கூட்டம் கொடியவரை

கொடுமை செய்ய, இரும்பாலே தூண்டிலது எங்குமே தானிரு:
நெருப்பெரிய செம்புருக்கி நிலத்திலே செய்து வைத்தார்.
கருநாயும் சென்னயும் கலந்து நிறுத்தியங்கு
இங்கிலியரனைபேரை கெட்டியாய் காவலிட்டு,
செப்பமுட னிருபேரும் சிறப்பாக தானிருந்தார்.

## விருத்தம் 2.

வள்ளுவனையழைத்தே வார்த்தை ஒன்று சொல்லலுற்றார்.
ஈரேழுலகும் சென்று இதமாய் பறையடிப்பாய்.
காயிருக்க பழமுதிர அடித்துவா வென்றுசொல்லி
மகாபாக்கியமென்றுரைத்து மதகரியின் மேலூர்ந்து.
துர்க்கை திருக்கோயில் தூரவேதான் தெரிய
துய்ய கரிவிட்டிறங்கி துர்க்கைதனை பணிந்தான்.
மதுவுதனைக் கொடுத்தாள் மாகாளியப்போது
அரக்கும் மதுவும் அளவின்றி தான்குடிக்க.
பதினலு உலகறிய பறையறைந்து சொல்லலுற்றான்
பழமுதிர காயிருக்க என்று சொல்லி பண்புடனே.
முறையிட்டு பறையறைய முழக்கினனப்போது
இந்தமொழி கேட்டு எல்லோரும் தான்மகிழ்ந்து.
அநேக சிறுமைந்தர் இரைச்சலிட்டெதிரே வந்து
வள்ளுவனும் பிள்ளைகளை வருத்தினன் கோபத்தால்.

## விருத்தம் 3.

அப்போது பாலர்க்கு அதிக கோபமுண்டாகி
கையில் மணலை அள்ளி காற்றிலே தூற்றிவிட்டார்.
மண்விழுந்து கண் கலங்கி, கசங்கி கடுங்கோபத்தால்
பூவுதிர பிஞ்சுதிர பொடுகெனவே பொட்டுதிர.
காயும் பழமும் கலந்துதிர வேணுமென்று
மதுவெறியாலிரங்காது மாபாவி தானடித்தான்.

எல்லோரும் கூடி எழில் கணக்கரண்டை வந்து
வள்ளுவன் செய்ததொரு வகைமோசம் தனைசொலவே.
இருபேரும் கண் சிவந்து வள்ளுவனை வரவழைத்து
வாய்மதங்களாலே வள்ளுவனே ஏதுரைத்தாய்.
மலரடிபணிந்தே அவனும் என்பிழையல்ல வென்றான்.

## விருத்தம் 4.

காளி அரக்குவெறியால் அடித்தேன் முரசையிப்போ
பிள்ளைகள் துற்சனரால் பிழைகேடாய் சொல்லிவிட்டேன்.
உள்ளமுடன் சொன்னதல்ல உத்தமரே பொறுப்பீரென்றான்.
பிள்ளைகளாலே பிழைகேடு வந்ததையா.
வள்ளுவன் முன் சொற்படிக்கே வாழ்ந்திருக்க வரமளித்தார்.
செட்டிச்சி சீட்டு சிக்கினதே கைதனிலே.
இனிமேல் விளம்பிடுவோம் இன்பமாய் கேளுமென்றார்.
சித்திர புத்திரன் கதையை சிறக்கவே கேட்டவர்கள்
பாடி படித்து பக்திமிக உண்டாகி
நாடி எழுதினபேர் நல்விரதம் செய்த பேர்கள்
செல்வம் படைத்து சிறப்பு மிகபெருகி.
புத்திர பாக்கியமும், புகழ்பெருகும் மாங்கல்யமும்,
தீராத பிணிதீர்ந்து, சிவனடியை தானடைந்து,
முக்தி பதம் சேர்வார் முக்காலும் உண்மை என்றார்.

சுபம்! சுபம்!!

**சித்திர புத்திரர் கதை முற்றிற்று.**



ஸ்ரீ

# அமராவதி சரித்திரம்.

## டாடே இடபரா மெட்டு.

அமராவதி செட்டிச்சி அருஞ்செல்வம் தான்படைத்து
தான தர்மங்கள் மிகசெய்து வந்தாள்.
மைந்தன் மனைபடைத்து மங்கிலியம் தழைத்து
வாழ்ந்து வருகிற நாளையிலே.

வாழ்வு முடிந்திடவே வந்து எமதூதர்கள்
அண்டையில் நெருங்கிட அவளுக்கண்டு
போஜனங்களளித்து பணிந்து உபசரித்து
ஏதுகுறை என்று விண்டிடவே.

புண்ணியம் செய்ததால் புலப்பட்டோம் இவளுக்கு
இவளை எடுப்பதும் நம் தர்மமல்ல
என்று ஏகி தூதர்கள் எமனிடம் சென்று விண்டு
இதைக்கேட்டு எமன் மிகக்கோபம் கொண்டு.

கொண்டுவருகிறேன் குறிகெட்ட தூதுவரே என்று
எமனும் அதிக்ரூரமுடன் எருதின்மேலேறியே
இளங்கொடி வாசல் சென்று நின்றிட
கண்டவள் ஓடிவந்து.

தாகம் பசியுமுண்டோ தருமனே உந்தனுக்கு
தருகிறேன் இந்த க்ஷணந்தனிலே
அகத்திலிருக்கும் வஸ்து ஆரணங்கே நான் அருந்தேன்
அப்போ கறந்த பால் அருந்திடுவேன்.

என்று உரைக்கலுமே ஏனமெடுத்தே அவள்
காராவின் அண்டையில் கடுகிவர
கொம்பிலிருந்து நமன் கூற்றுவனுயவளை
கொண்டு சென்றான் கணபொழுதினிலே.

எமலோகம் தானடைந்து கணக்கர் முன் தான்விடுத்து
இவள் தர்மம் என்னவென்று கேட்கலுமே
ஏதிவள் செய்தாலும் என்னோம்பு நூற்காததால்
இவளைப் படுநரகில் தள்ளுமென்றான்.

கணக்கில்லா நரகிலே தள்ளவே
தர்மங்கள் தலைகாத்து நின்றிட தானறிந்தான்.
கொடுநரகில் தள்ளி கோதையை வருத்திட
குளிர்தண்ணீர் கொடுக்காமல் வதைகள்செய்ய.

ஈயத்தைக் காச்சி இளங்கொடிக்கே அளிக்க
இளநீராய் இருந்திட கண்டவரும்
நரகிலிருந்தவர்கள் நாயகியை பார்த்த உடன்
விடுதலை அடைந்து மிகக்களித்தார்.

முக்கண்ணன் கூலி மெட்டு.

அமராவதி தேவி அந்தக்ஷணந்தனில்
எண்ணைக்குடத்தை எடுத்துக்கொண்டு
சித்திர புத்திரரால் சித்தடி நோகவே
தெருவீதி யெங்கும் திரிந்து அலைந்திட
ஒருவரும் அண்டாமல் உத்தமியும் அப்போ
மெத்த புண்ணாகியவள் சிரஸு தெரித்திடவே.

கண்கள் பிதுங்கவே கதறி அழுதவள்
காலமோ என்செய்வேன் என்றலர
வீதிதோறும் சுற்றி வேர்த்து வருகவே
ஓர் ப்ராமண ஸ்திரீயும் பதிவாயிறக்கியே
தண்ணீர் தவித்திட தான் கொடுத்து அவள்
தாகம் தெளிந்திட தையலர்க்குரைப்பாள்.

எத்தனை தர்மங்கள் ஏற்றமாய் செய்தாலும்
சித்திர புத்திரர் நோன்பு நூற்காததால்
அவரை நினையாமல் அவனியில் தர்மங்கள்
ஆயிரம் செய்தாலும் அவதி நிச்சயமே
இனியாகிலும் இவர் நோன்பு உலகிலுள்ளோர் தானறிய
உத்தமியே சென்று நீயும் உரைத்திடுவாய் தக்ஷணமே.

சித்திர புத்திரர் மலரடி பணிந்து
மன்னனிடம் விடைபெற்று மன்னிப்பு கேட்டு தளர்ந்திடவே
கருணை மிகக்கொண்டு கணக்கர் எடுத்துரைப்பார்.
என் நோன்பு உன்னுல் உலகறியவேணும்
என்னை நினையாதோர் இந்த இடர்பட
எதுவாகும் உத்தமியே எந்தனுடன் பிறப்பே.

## நொண்டிச்சிந்து.

உத்தமியை அனுப்பி உலகில் செப்பிட
விருதந்தனை செய்திடவே அமராவதியாளும்
அவனியில் அருநோன்பு செய்து களித்திருக்க
கணக்கன் பிறப்புரைக்க
ஒருவரும் தரணியிலில்லாமலே தவித்திடவே
சிவனுர் தேவியப்போ பூந்தேரில் பூலோகம் வந்திரங்கி
புனிதமாக நயினர் பிறப்புரைத்து.
நல்ல கதைதனை படித்து
பதம் பணிந்து சென்ருர் கைலை நகர். பூவுலகில்.
மாதரெல்லாம் புகழ்மிகு விருதம்செய்து
அமராவதியாலே எல்லோரும் ஆனந்தமாகவே
வாழ்ந்திருந்தார் முக்தி நிலையடைந்தார்.
நரகத்தில் நாடும் மனிதர்களுமில்லாமலே
தேவன் பதம் அடைந்தார்.
பூந்தேர் அனுப்பியே புண்யவதி அமராவதிக்கு
தம்பதியுடனுக இருபேரும்.
சிவகணம் சூழவே கைலை வர
சிவசக்தியை பணிந்து சித்திர புத்திரனை
தொழுது போற்றிடவே அடைந்தார் பதவிதனை.

**அமராவதி கதை முற்றிற்று.**

## மங்களம்.

சித்திர புத்திரனுக்கு ஜய மங்களம்!
சீர்புகழும் இந்திரனுக்கு சுபமங்களம்!
பத்தினி அமராவதி பாற்புகழும் தேவருக்கு
சக்தி தர்ம ராஜருக்கு சந்திர சூரியற்கு.

பஞ்சமுகன் தேவியான கஞ்சதளாக்ஷிணிக்கு
பஞ்சைமேலிரக்கம் வைத்து பக்தியளித்தவர்க்கு
முக்தி கொடுக்கும் தில்லை மூலஸ்தான ரூபருக்கு
சக்தி சிவகாமியாம் ஸாயுஜ்ய ரூபிணிக்கு.

சித்திரத்தில் வந்துதித்த செல்வக் குமாரருக்கு
சேர்வை தந்து ஜயம்பெற செய்த ஸ்ரீ லெக்ஷிமிக்கு
சிறியாளிடம் உரையும் தேசிக ரூபணிக்கு
சின்மய சித்தானந்தமாம் ஸ்ரீ லெலிதேஸ்வரிக்கு.

காமதேனு என்றேனுக்கு ஜயமங்களம்!
காருண்ய ரூபருக்கு சுப மங்களம்!!
கேட்போர் படிப்பவர்கள் கீர்த்தியுடைய பெரியோர்
சிறியாளிடம் உறையும் தேசிக ரூபிணிக்கு.

அக்ஷர பிழை பொறுத்து ஆதரிக்க வேணுமே
அவனியில் பிழை பொருத்து அடைக்கலம் தாருமே.
குற்றமின்றி காத்தருள குஞ்சரமே தோணுமே
கோபால தேவியான குருமணிக்கு மங்களம்!!



சுபம்! சுபம்!! சுபம்!!!






